# கைதிகள்

"அவன் கிடக்கிறான் திருட்டுப் பயல்" என்றான் 84.

"'செ! என்னடா, அந்த ஆசாமியைப் போய் அப்படித் திட்டுகிறே?" என்று கேட்டான் 63.

"ஏண்டா! என்றாவது, அவன் கோயிலிலே சமாராதனை செய்கிறானே. அந்தச் சமயம், உனக்கும் ஒரு இலை கிடைத்தது போலிருக்கு, அதனாலேதான், அந்தத் திருட்டு ஆசாமியைத் தூக்கி வைச்சிகிட்டு ஆடறே." என்று விளக்க முறைத்தான் 84.

"போடா போ! ஆளைப் பார்த்தாலே நல்லவனென்று தெரிந்து கொள்ளலாம். . ."

"கோயிலுக்கு வருகிறபோது பார்த்திருப்பேடே! அவனைத் தெரிந்து வேணும்னா, கோபுர வாசற்படியண்டை பார்க்கக் கூடாது அங்கே வருகிறபோது, முலாம் போட்டுக் கொண்டுதான் வருவான் அவனுடைய நிஜ சொரூபத்தைப் பார்க்க வேணும்னா... "84 பேச்சை முடிப்பதற்குள், வார்டர் வந்து விடவே, இருவரும், அவர்களுடன் இருந்த வேறு பல நம்பர்களும், தொப்பியைச் சரிப்படுத்திக் கொண்டு, வேலைக்குப் புறப்பட்டனர். எங்கே என்று சொல்லவில்லையே–ஜெயிலில்! 84, கருப்புக் குல்லா; அதாவது பல தடவை ஜெயிலுக்கு வந்தவன்–63 முதல் தடவை– அதாவது ஜெயிலும் அவனுக்குப் புதிது, ஜெயில் புக வேண்டியதற்கான தொழிலையும் அவன் அவசரத்திலே கற்றுக் கொண்டவன்.

"ஏண்டா! இது எத்தனையாவது தடவை?" என்று மாஜிஸ்ட்ரேட் கேட்டபோது 84, அதாவது குட்டியப்பன், இலேசாக ஒரு புன்சிரிப்புக் காட்டி, "என்ன எஜமான்! தண்டிக்கிற தொரைக்குத்தானே கணக்குத் தெரியும்!" என்று ஹாஸ்யம் கூடப் பேசினவன். அவ்வளவு 'தேறிய ஆள் – சிறைப் பறவை! ஆசாமி,

கூட்டம் பார்த்து நுழைவது, ஒரு உரசல் ''என்னாய்யா மாடு மாதிரி மேலே விழறே'' என்று கேள்வி, இதற்குள், வழிப் போக்கனின் மணிபர்ஸ் மறையும். அந்த வேலையில் அவனுக்குத் தெரிந்த புதுப்புது முறைகள் பல. போலீசாரேகூட, லாக்கப்பில் அவன் இருக்கும்போது, பொழுது போக்குக்கு அவனுடைய முறைகளைக் கூறும்படி கேட்டுச் சிரிப்பார்கள். அவனுக்குப் போலீசார் அனைவரும் – அடிப்பவர் அடிக்காதவர் இரண்டு ரகமும் – 'நாய்னா'தான் – அதாவது என்னா நாய்னா! என்றுதான் கூப்பிடுவான் – அவ்வளவு அன்பு காட்டுவான். அத்தகைய திருட்டுத்தனம் செய்து, கருப்புக் குல்லாக்கார னானவன் ஊரிலே கவுன்சிலராக, கோயில் தர்மகர்த்தாவாக, இருக்கும் ஒருவரைப் பற்றி வேறோர் திருட்டுக் கேசில் தண்டிக்கப்பட்ட, ''கைதியிடம்'' கேவலமாகப் பேசினான், ஜெயிலிலே.

''அவனுடைய நிஜ சொரூபத்தைப் பார்க்க வேண்டு மானால், கோபுர வாசற்படியண்டை பார்க்கக்கூடாது. எங்கே பார்க்க வேணும் தெரியுமா. . .'' அவ்வளவுதான் 63–க்கு அவன் சொன்னது–வார்டர் தடையாக வந்து சேர்ந்தான் இதற்குள்.

'ஜன சகாய நிதி'த் தலைவர் தருமலிங்கம் பிள்ளை, தவியாய்த் தவித்துக் கொண்டிருந்தார் வீட்டிலே. மறுநாள் சர்க்கார் மேலதிகாரி, 'நிதி'யைப் பார்வையிட வருவதாகக் கடிதம் வந்துவிட்டது. நிதியிலே, அடகு வைக்கப்பட்டிருந்த கெம்பு அட்டிகையை, இரவல் கொடுத்து விட்டிருந்தார் – கலியாண விசேஷத்துக்கு – இன்னும் வரவில்லை – தருமலிங்கம்பிள்ளை தவிக்காமல் எப்படி இருக்க முடியும். ஆள் அனுப்பி இருந்தார் – அவன் ஆமையாகி விட்டானோ என்னவோ, திரும்பி வரவில்லை, பதைக்கிறார் பிள்ளை.

''ஐயா, காலையிலே பத்து மணி சுமாருக்கு வருவதாகச் சொன்னார் – வெந்நீர் தயாராக இருக்க வேண்டும் – இன்னின்ன விதமான சமையல் இருக்க வேண்டும்' என்று ப்யூன் வந்து சொல்லிவிட்டான். தர்மலிங்கம் பிள்ளைக்கு அடிவயிறு கலக்கம். இரவல்தான் கொடுத்தார்–ஆனால் சர்க்கார் ஆபீசரிடம் எப்படிக் கூற முடியும்? பொதுப் பணத்தைக் கையாண்டார் என்ற குற்றம் சாட்டப்பட்டால். நினைக்கும்போதே தர்மலிங்கம் பிள்ளைக்குத் தில்லை, திருப்பதி, திருவரங்கம் போன்ற சகலமும் நாக்கு நுனியிலே வந்து நின்று 'நர்த்தன மாடின. கையைப்

பிசைந்து கொள்கிறார், பெருமூச்செறிகிறார் – கண்ணீர் விடாதது ஒன்றுதான் பாக்கி.

கற்பகவல்லி, தன் கணவரின் நிலையைப் பார்த்துச் சிரிக்கலானாள். 'என்னங்க கூத்தா இருக்கு! ஏன் இப்படிப் பதறுகிறிங்க. அட்டிகையைக் கொண்டு வந்து அவரும் தராம போயிடுவாரா? இல்லை. ஆபீசரிடம் சொன்னா அவர் என்ன தலையை வாங்கிடுவாரா! இல்லாதப்பட்டவங்களுக்கா இரவல் கொடுத்தோம். வைர அட்டிகைக்காரர் வீட்டுக்குத்தான். இந்தக் கெம்பு அட்டிகை இரவல் போயிருக்கு, இதுக்கு என்னமோ, கலங்கிக்கிட்டு நிக்கறிங்க'' என்று கற்பகம் பேசினாள்.

''சனியனே! உனக்கு என்ன தெரியும்? செக்குன்னு தெரியுமா சிவலிங்கம்னு தெரியுமா, நான் படுகிற வேதனை உனக்கென்ன தெரியும்'' என்றார் பிள்ளை. ''அதைத்தானே நான் கேட்கறேன். ஏன் வேதனைப்படணும். வைத்தீஸ்வர முதலியார் வீட்டுக்கு நகையை இரவல் கொடுத்தா, என்ன? அவர் என்ன உங்களை ஏமாத்தி விடுவாரா! வாங்கினதை இல்லேன்னு சொல்கிற மகராஜனா அவரு'' என்று வாதாடினாள். தலை தலை என்று அடித்துக் கொண்டார் தருமலிங்கம் பிள்ளை. கற்பகத்துக்கு நிதி சம்பந்தமான சட்ட திட்டம் என்ன தெரியும். அது ஒரு காட்டுப் பூச்சி! ''என்னா கற்பகம்! என் உயிரை வாங்கறே. ஊரார் நகை அது, பாங்கிலே அடமானம். அதை இரவல் கொடுத்து விடுவது கூடாது'' என்று சிறு குழந்தைக்குப் பாடம் கற்றுக் கொடுப்பது போலக் கூறினார். கற்பகமோ, ''சரிங்க, அவருக்கு இரவல் முத்து அண்ணனா! வாண்ணேன். தம்பி! இவருக்குத் தெரியும் அவருடைய யோக்யதை வேணுமானா கேட்டுப்பாரு'' என்றான் 84. யாருடைய யோக்கியதைப் பற்றியப்பா நீங்க நியாயாதிபதிக நடு ராத்திரியிலே பேசிகிட்டு இருக்கிறீங்க'' என்று அந்தக் கைதி கேட்டான். ''வைத்தீஸ்வர முதலியார் விஷயமாத்தான்'' என்றான், 84 அந்த முழுப்பா சுருட்டின விஷயமா'' என்றான் அந்தக் கைதி. ''உங்களுக்கும் தெரியுமா அவர் விஷயம்'' என்றான் 63.

''தெரியுமான்னா கேட்கறே? நான் இங்கே வந்ததே அந்தப் புண்யவானாலேதான். கேள் தம்பி! நான், முதலியார் குடும்பம் சின்ன வயதிலே, படிக்கலை சரியா – பள்ளிக்கூடம் போவேன் வருவேன் – வீட்லேயும் அடங்கறதில்லை – வீட்டிலேயோ ஓயாத சண்டை, அப்பாவுக்கும் – அம்மாவுக்கும். அந்தச் சண்டைதான்

எனக்குப் பாஷை கத்துக் கொடுக்கிற பள்ளிக்கூடமாக இருந்தது. ஒரு வேலையும் எனக்குச் சரிப்பட்டு வரவில்லை. எதிர்வீடு பக்கத்து வீடு போவது, சீட்டு ஆடுவது, கதை பேசுவது இப்படிப் பொழுது போக்குவேன். எதிர் வீட்டிலே, ஒரு ஆச்சாரி, நகை செய்வாரு, அங்கே போய் உட்கார்ந்து கொண்டு, அவர் தொழிலைப் பார்த்துக் கொண்டிருப்பதிலே எனக்கு ஒரு பிரியம். இப்படிப் பார்த்துப் பார்த்து நான் அந்தத் தொழிலையும் கொஞ்சம் கொஞ்சம் கற்றுக் கொண்டேன். ''உனக்கேம்பா இந்தத் தொழிலு'' என்றுதான் அவர் கேட்பார், ''சும்மா தமாஷுக்குத்தான்'' என்று நான் சொல்வேன், உண்மையிலேயே தமாஷ்தான், எனக்கு. ஒரு வேலையும் கிடைக்காது குடும்பக் கஷ்டம் ஏற்பட்ட போது ஒரு நினைப்பு வந்தது, ஏன் நாம் அந்தத் தொழிலையே செய்தாத்தான் என்னான்னு. ஆனா மறு விநாடி, அந்த யோசனையை விட்டு விட்டேன். நாம்ப முதலியார் ஜாதி – நாம்ப போய், இந்தத் தொழிலைச் செய்தா – ஜாதியாரு என்னா எண்ணு வாங்கன்னு விட்டுவிட்டேன். இந்தச் சந்தர்ப்பத்திலே தான் வைத்தீஸ்வர முதலியார், எங்க ஊர் கோயில் சொந்தக்காரர்கூட, மாமான்னு தான் கூப்பிடுவது. அவர் என்னிடம் திடீரென்று ஆசையாக இருக்கத் தொடாங்கினார். எனக்குக் காரணம் தெரியவில்லை அப்போ. இப்ப தெரியும். ''வைத்தி தர்மகர்த்தா வேலையைப் பார்த்து விடுவானா? நான் பார்க்கிறேன் அதை'' என்று முன்பு தர்மகர்த்தாவாக இருந்த மோட்டூராரு மீசையை முறுக்கிக் கொண்டு இருந்தார். அவரிடம் அடி ஆள் உண்டு. அதனாலே, வைத்தீஸ்வர முதலியார் பயந்து போய், என்னைத் துணைக்கு வைத்துக் கொண்டு, காரியத்தைச் சாதித்துக் கொண்டதோடு விடவில்லை. அந்த வைத்தி. என்னிடம் பேசிப் பேசி, எனக்கு நகை செய்யத் தெரியும் என்கிற விஷயத்தைத் தெரிந்து கொண்டார். உடனே பிளான் போட்டார். கோயிலிலே இருக்கிற முக்கியாமான கல்லிழைத்த நகையை எடுத்து வருவாரு. அவருடைய வீட்டிலேயே தனி அறை – நான் அங்குப் பெயர்த்துவிட்டு வேறே வெள்ளைக்கல் புதைத்தது வைத்திக்கு – நம்ம வேலைக்கும் பணம் கிடைக்கும் – இது போல, வைரம், பச்சை, கெம்பு இப்படி முதலிலே வேலை தீர்த்தாச்சி – பிறகு, தங்க நகையைக் கவனிக்க ஆரம்பிச்சோம். ஏண்டா தம்பி! உனக்கு ஆச்சரியமாக இருக்கா! எப்படி இவ்வளவு தப்பு தண்டா செய்துவிட்டு, வைத்தி வேளிலே இருக்கிறான். அதிலும் கௌரவமா இருக்கிறான்னு யோசிக்கிறயா! அதுபோல

எவ்வளவோ பேர்டா! ஜெயிலுக்குள்ளேதான் திருட்டுப் பயல்கள் இருக்கிறதாக எண்ணாதே. ஜெயிக்காதவன் ஜெயிலிலே, ஜெயித்தவன் சுகத்திலே இருக்கிறான், கேள் கதையை! இப்படி, தர்மகர்த்தா, கோயில் நகையைத் ''தீத்துக் கட்டிக்கிட்டு'', இருந்தாரா? நானும் அதையே பிழைப்பாக்கிக்கிட்டு, கொஞ்சம் சௌக்கியமாகத்தான் இருந்தேன், கையிலே காசு நடமாட ஆரம்பிச்சதும், குடி அதிகமாயிடுத்து, குடி அதிகமாயிடவே, வேறே நகையைத் தேடவேண்டியதாச்சி, வைத்தி தனக்கு இனிமேல்பட அம்மாதிரி காரியத்திலே சாமி வந்து மிரட்டிச் சின்னு சொன்னான் – விஷயம் அதுவல்ல – சர்க்காரிலே, தர்மகர்த்தாவுக்குத் துணையாக காரணம் எப்படியோ ஒண்ணு, நான் வேறே இடம் தேட வேண்டியதாச்சி. கொஞ்ச நாள் அதிலேயும் வெற்றிதான். உதவிக்கு ஒரு ஆசாமியை வைச்சுக் கிட்டேன். உதவிக்கு வந்த ஆள் ஒரு ஆச்சாரி. கடை விலாசம் அவன் பேரில்தான் – எல்லாம் வைத்தி யோசனைதான்.

இப்படி. 'தொழிலை' நடத்தி வந்த போது. ஒரு கேசிலே சிக்கிக்கிட்டோம் – நல்ல கெம்பு அட்டிகை, அது ரிப்பேருக்கு வந்தது – நாலு கெம்பை நகர்த்திவிட்டு, அதிலே நல்ல இமிடேஷன் கெம்புவைத்து அழுத்திக் கொடுத்து விட்டோம் – நம்பப் 'போறாத வேளை', அதை அந்த ஆசாமிங்க ஈடுவைக்க வேண்டி இருந்தது – அதுவும் வைத்தி கிட்டவேதான் போனாங்க – அவரிடம் பேசறபோது, அந்த அட்டிகயினை என்னிடம் ரிப்பேர் செய்ததாகச் சொன்னார்களாம். அந்தப் பாவி உடனே சிரித்துக்கொண்டே; ஒஹோ! நகை அங்கே போய் வந்ததா – இது மேலே பணம் தர முடியாது' என்று சொல்லி விட்டான். சந்தேகமாயிடுத்து அவர்களுக்கு – வேறே இடத்திலே கொடுத்தாங்க விஷயம் வெளியாயிடுத்து – இதோ நான் இங்கே இருக்கிறேன் – கேசிலே மாட்டிகிட்டபோது கெஞ்சிப் பார்த்தேன் வைத்தியிடம்; ஒரு உதவியும் செய்யவில்லை. என்கூட இருந்த ஆசாமிக்குத் தண்டனை முடிந்து வெளியே போய் என்னா செய்யப் போகிறென்னு தெரியாது அவனுக்கு. கோயில் நகை விஷயமாக. அம்பலப்படுத்திவிட்டு மறுவேலை பார்க்கிறேன். என்கூட இருந்த ஆசாமி, இப்ப வெளியே வந்ததும் அவனைத் தீர்த்துப் போடணும்'' என்று உஷார்படுத்தித்தான் அனுப்பி இருக்கிறேன். அப்படிப்பட்ட திருட்டு ஆசாமி – கோயில்

சொத்தைக் கொள்ளை அடிச்சவன் – முழுப்பா சுருட்டியாச்சே, வைத்தீஸ்வரன், அவன் வெளியிலே இருக்கறதாலேயே அவன் யோக்யன்னு எண்ணிடாதே. எனக்கு இந்தத் திருட்டுத் தொழிலைப் பழக்கமாக்கியதே அவன்தான். அதனாலே அவன் இலாபம் அடைந்து பெரிய மனுஷனாய் விட்டான். நான் ஜெயிலிலே இருக்கிறேன். தம்பி! சொத்து, நகை பணம் காசு இதெல்லாம் பேச ஆரம்பிச்சா, தெரியும், ஜெயிலுக்கு வெளியே எவ்வளவோ கள்ளனுங்க இருக்கிற சூட்சமம்' என்று அந்தக் கைதி கூறினான்.

''கேட்டுக்கிட்டாயா 63. அப்படிப்பட்ட வைத்தீஸ்வரனை, நீ வேஷத்தைப் பார்த்துவிட்டு பெரிய மனுஷன்னு சொல்லறே, விவரம் தெரிந்து கொள்ளாமே. மாயவரத்துக்கு அடிக்கடி வருவான் இந்த வைத்தீஸ்வரன். அங்கேதான் எனக்கு இவன் எடுத்துக் கொண்டு அதிலே இருந்தான். நான் அந்தச் சமயத்திலே ஒட்டல் பக்கம் போய் வருகிற வழக்கம் – அங்கே கொஞ்சம் சௌகரியமாகச் சாமான்கள் கிடைத்து வந்தது. ஒருநாள் இவன் ரூமுக்குள்ளே நுழைஞ்சேன் – இவன் கீழே குளிக்கப் போயிருந்தான் – உள்ளே போய்ப் பார்க்கிறேன் ஒரு பெட்டி நிறைய 'அபின்' அடைச்சி வைச்சிருக்கு. அபினைப் பெட் டியிலே போட்டு அடைச்சி, அது மேலே ஒரு தட்டு போட்டு மூடி, அந்தத் தட்டு மேலே, அத்தர் பாட்டில் வைத்திருக்கிறான். அத்தர் வியாபாரம் செய்கிறதாகப் பாசாங்கு. பார்த்தேன். வெளியே போகவில்லை. சரி! இவனை ஒரு கை பார்த்து விடுவது என்று தீர்மானித்து, அங்கேயே கட்டில் மேலே உட்கார்ந்து விட்டேன். ஆசாமி வந்தான். . . கதவைச் சாத்தி வைத்திருந்தேனல்லவா – பூட்டி இல்லாமல் போகவே பதறிப் போனான் – கதவைத் திறந்து உள்ளே வந்தான் – என்னைப் பார்த்தான் ஒரே அலறல் ''ஸ்! கூச்சல் போடாதேய்யா. கதவைச் சாத்திவிட்டு உட்காரு. அத்தர், வாங்க வந்திருக்கிறேன்'' என்று மெதுவாகச் சொன்னேன். ஆசாமி மிரண்டு போனான்.

''சரியான ஆசாமிதானய்யா நீ. அத்தர் கீழே அபினி – அபினி மேலே அத்தர் – என்னா ஜோரா ஏற்பாடு செய்து கிட்டே'' என்று கேலியாகப் பேசினேன். அவனும் பல்லை இளித்துக் கொண்டான். பிறகு பேரம் நடந்தது. இருநூறு ரூபா கிடைத்தது. நானும் அவனும் சிநேகிதரானோம். இரண்டு மூன்று நாள் – அதற்குள்ளே அபின் விற்கப்பட்டாகி விட்டது –

யாராரோ ஆசாமி இவனுக்கு ஏஜெண்டுகள் – ஊருக்குப் புறப் படும்போது, அவனுக்கு ஒரு பயம் நான்கூட வருகிறேனோ என்று – நான் இவனுடைய விலாசம் யாவும் விசாரித்துக் கொண்டால், அவ்வப்போது மிரட்டலாமே என்று ஆசைப்பட் டேன். ஆகவே அவன் எனக்குத் தெரியாமலே ஊருக்குக் கிளம்பப் பிளான் போட்டான், ஒட்டலிலே இவனுக்குப் பேர் அத்தர் வியாபாரம் ஆறுமுகம் பிள்ளை – என்னிடமும் அதே பேரைத்தான் சொன்னான். இவன் துணியிலே பார்த்தா, வி என்று குறி இருந்தது. எனக்குச் சந்தேகம் – இவனை விடக் கூடாது பின் தொடர வேண்டும் என்ற எண்ணம், இரயிலிலே ஏறிக் கொண்டான். செகண்டு கிளாசிலே ஆரஞ்சு தருகிறான் ஆப்பிள் தருகிறான் எனக்கு. ஆனா கூட மட்டும் வரவிடவில்லை வண்டி புறப்பட்டது. நான் விடை பெற்றுக் கொண்டேன். ஆசாமி, நான் தொலைந்தேன் என்று சந்தோஷப்பட்டிருப்பான் – நானா இவனுக்கு ஏமாறுகிறவன் – நம்ம பொடிப் பயல் ஒருவனை முன்னேற்பாடாக அனுப்பி இருந்தேன், தகவல் விசாரித்து வர – பயல் இரண்டு நாள் கழித்து வந்த என்னிடம் சொன்னான் தகவலை, 'அவர் பேர் வைத்தீஸ்வர முதலியாரு. ஊரிலே அவருக்கு ரொம்ப நல்லவருன்னு பேரு. எல்லோரும் அவரிடம் மரியாதை காட்டுகிறார்கள். கோயிலுக்கு அவர் தர்மகர்த்தா.'' என்றெல்லாம் கூறினான். அத்தர் ஆறுமுக முதலியார் வேஷம் போட்ட ஆசாமியைப் போலீசிலே சிக்க விடலாம்னு கூட நினைச்சேன் – சிக்கவிட்ட நமக்கு ஒரு இலாபமும் இல்லை – சரி கிடைத்த வரைக்கும் அவனிடமே கரைப்பது என்று எண்ணி இரண்டொரு மாதம் காத்துக் கொண்டிருந்தேன். ஆசாமி மாயவரம் பக்கம் தலைகாட்டவே இல்லை – ஏஜண்டுகளுக்கு கடிதம் போட்டு, இடம் வேறு ஏற்பாடு செய்து கொண்டான் போலிருக்கு. கடைசியில் ஊருக்குப் போய், நேரடியாகவே பார்த்துவிட்டு வருவதுன்னு போனேன் – பார்த்தேன் கோயிலிலே – கும்பிடு போட்டேன், ''யார் எந்த ஊர்?'' என்று கேட்க ஆரம்பித்தான் – அத்தர் ஆறுமுக முதலியார் என்று பெயரைக் கவனப்படுத்தினேன். ''யாரடா இவன் ஆள் மாற்றாட்டமாகப் பேசுகிறான்'' என்று முறைப்பாகப் பேசினான்–இதற்குள்ளே கோயில் சேவகர்கள் வந்து சூழ்ந்து கொண்டார்கள் என்னை – அடித்தும் விட்டார்கள் – கூவினேன், சொன்னேன், இந்த ஆசாமி அபின் வியாபாரம் தள்ளப்பட்டேன். இதற்குள் போலீசார், என்னைப் பற்றித் தகவல்

விசாரித்து விட்டனர். மாயவரம் போலீசார் நான் ‘முன்னாலே ஜெயிலுக்குப் போய் வந்தவன்’ என்று தகவல் கொடுக்கவே, கோபுர வாசற்படி அருகே, தர்மகர்த்தா வைத்தீஸ்வர முதலியார் மடியிலிருந்து பணப் பையைப் பிடுங்க முயற்சித்ததாக கேஸ் போட்டார்கள் – தண்டனையும் தந்தார்கள். அப்படிப்பட்ட வைத்தீஸ்வரனை அவன் நம்மோடு ஜெயிலிலே இல்லாத காரணத்தினாலேயே, பெரிய யோக்யன் என்று பேசுகிறாயே'' என்று 84 கூறினான். 63 ஒரு நீண்ட பெரு மூச்செறிந்து. ‘‘இப்படியா இருக்கு விஷயம். நான் ஏழைகள், இல்லாதவர்கள், கெட்டுப் போனவர்கள் மட்டும்தான் திருடுகிறார்கள் என்று நினைத்தேன். நானும் திருடிவிட்டு ஜெயிலுக்கு வந்தவன்தான். ஆனா, என் கஷ்ட காலம் எனக்கு அப்படிப்பட்ட புத்தியைக் கொடுத்தது. நான் இந்த வைத்தீஸ்வர முதலியாரைப் பார்க்கிற போதெல்லாம் அடடா! எவ்வளவு பெரிய மனுஷராக இப்படி அல்லவா இருக்க வேண்டும். நாமோ திருட்டுப் பயலானோமே என்றெண்ணி வருத்தப்படுவது வழக்கம். நீங்கள் சொன்னதைக் கேட்டா, இந்த ஆசாமி, மகா மோசக்காரனாக அல்லவா இருப்பதாகத் தெரியுது'' என்று கூறி ஆயாசப்பட்டான்.

'விடிவதற்குள்ளே முடியாது போலிருக்குங்களே என்னா, இப்பல்லாம் முந்தியாட்டம் வேலை செய்ய முடியறதில்லைங்க. ஜெயிலிலே போடறான் பாருங்கோ, அந்தக் கீரைக் குழம்பு, அது இரத்தத்தை உறிஞ்சு எடுத்து விடுதுங்கோ. நீங்களே பாருங்களேன், உடம்பு எனக்குத் துரும்பு துரும்பா இளைச்சித்தானே போச்சிங்க' என்று பேசிக் கொண்டே, கெம்பு அட்டிகையின் கற்களைப் பெயர்த்தெடுத்துக் கொண்டே இருந்தான் கண்ணாச்சாரி. வைத்தீஸ்வர முதலியார் ‘‘வெறும் கீரையா? சோறு அளவுகூடச் சரியாக இருக்காதா?'' என்றெல்லாம் அவனிடம் பேச்சுக் கொடுத்துக் கொண்டே வேலை வாங்கிக் கொண்டிருந்தார்.

**12-1-1947**

❄ ❄ ❄ ❄ ❄